## உங்கள் கேள்வியும் வேதஆராய்ச்சியாளர் எம்.எஸ்.வசந்தகுமாரின் பதிலும்

**ஆதியாகமம் 1:3-5இன்படி தேவன் சிருஷ்டிப்பின் முதல் நாளிலேயே வெளிச்சத்தை உருவாக்கியுள்ளார். ஆனால், ஆதியாகமம் 1:14-15இன்படி நான்காம் நாளே சூரியன் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. இது உண்மை என்றால் சூரியன் இல்லாத முதல் மூன்று நாட்களும் வெளிச்சம் எப்படி இருந்திருக்கமுடியும்?**

வேதாகமத்தின் முதல் புத்தகமான ஆதியாகமத்தின் முதலாம் அதிகாரத்தில் பலரால் சுட்டிக் காட்டப்படும் ஒரு முரண்பாடு, வெளிச்சத்தின் சிருஷ்டிப்பைப் பற்றியதாகும். ஏனெனில், ஆதியாகமம் 1:3-5இன்படி, தேவன் முதலாம் நாளிலேயே வெளிச்சத்தை உருவாக்கியுள்ளார். ஆனால், இவ்வதிகாரத்தில் 14 முதல் 19 வரையிலான வசனங்களின்படி, தேவன் நான்காம் நாளிலேயே சூரியனை சிருஷ்டித்துள்ளார். மேலும், சூரியனிலிருந்தே நமக்கு வெளிச்சம் கிடைப்பதினால், சூரியன் இல்லாமல் முதல் மூன்று நாட்கள் வெளிச்சம் இருந்ததாகக் கூறும் ஆதியாகம் 1:3-5, சூரியனுடைய சிருஷ்டிப்பை முரண்படுத்தும் வேதப் பகுதியாகப் பலரால் கருதப்படுகின்றது. அத்தோடு இது விஞ்ஞானரீதியாகப் பிழையானதாக இருப்பதாகவும் வேதவிமர்சகர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

சில கிறிஸ்தவர்கள், தேவன் முதலாம் நாளே சூரியனைப் படைத்துவிட்டார் என்றும், "நான்காம் நாளில் பூமியைச் சூழ்ந்திருந்த மேகங்கள் அகன்று வானம் தெளிவாகியதினால், முதலாம் நாளில் சிருஷ்டிக்கப்பட்ட சூரியன் நான்காம் நாளில் மானிடக் கண்களுக்குத் தென்பட்டது"[1] என்றும், "முதலாம் நாளில் வெளிச்சம் தராத நிலையில் சிருஷ்டிக்கப்பட்டிருந்த சூரியனுக்கு நான்காம் நாளில் ஏதோ நடைபெற்றதினால், அது பிரகாசிக்கக்கூடியதாக மாறியது"[2] என்றும் கூறுகின்றனர்.[3] ஆனால், ஏற்கனவே சிருஷ்டிக்கப்பட்ட சூரியன் நான்காம் நாளில் தென்பட்டது என்றோ, அல்லது பிரகாசிக்கத் தொடங்கியது என்றோ ஆதியாகமம் 1:14-19இல் குறிப்பிடப்படவில்லை. வானத்தின் சுடர்கள் அனைத்தும் நான்காம் நாளில் சிருஷ்டிக்கப்பட்ட தாகவே இவ்வசனங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.[4] எனவே, மனிதருடைய அறிவுக்கு ஏற்ற விதத்தில் வேதாகமத்தை வியாக்கியானம் செய்யும் இத்தகைய முறையைக் கிறிஸ்தவர்கள் பின்பற்றுவது தவறாகும். ஏனெனில், நம்முடைய விஞ்ஞான அறிவினால் அல்ல, எழுதப்பட்டிருப்பதை சொல்லர்த்தமாக முழுமையாக ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் நாம்

[1] J.H.Sailhamer, *Genesis: The Expositor's Bible Commentary Volume 2*, p. 26; A.P.Ross, *Creation and Blessing: A Guide to the Study and Exposition of Genesis*, p. 111.
[2] H.C.Leupold, *Exposition of Genesis*, p. 71; N.Geisler & T.Howe, *When Critics Ask*: *A popular Handbook on Bible Difficulties*, p. 30.
[3] N.Geisler & T.Howe, *When Critics Ask*: *A popular Handbook on Bible Difficulties*, p. 30.
[4] D.F.Kelly, *Creation and Change: Genesis 1:1-2:4 in the Light of Changing Scientific Paradigms*, p. 203; K.A.Mathews, *Genesis 1-11: The New American Commentary*, p. 149.

ஆதியாகமம் முதலாம் அதிகாரத்தை வாசிக்கவேண்டும். ஏனெனில், ஆதியாகமம் முதலாம் அதிகாரம் சொல்லர்த்தமாக எழுதப்பட்ட சரித்திரமாக உள்ளது.

உண்மையில், ஆதியாகமம் 1:3-5 அறியத்தருவதுபோல, தேவன் முதலாம் நாளிலேயே வெளிச்சத்தை உருவாக்கியுள்ளார். சகல உயிரினங்களும் வாழ்வதற்கு வெளிச்சம் அவசியம் என்பதனை அறிந்திருந்த தேவன், சகலவற்றையும் சிருஷ்டிப்பதற்கும் முன்பு வெளிச்சத்தைப் படைத்துள்ளார்.[5] ஆனால், நான்காம் நாளில், சூரியனைச் சிருஷ்டித்த தேவன், தாம் ஏற்கனவே முதல் நாளில் உருவாக்கிய வெளிச்சம் சூரியனிலிருந்து வெளிவரும் விதத்தில், அந்த வெளிச்சத்தைச் சூரியனில் வைத்துள்ளார்.[6] இதனால்தான், "சூரியன்" என்பதற்கு மூலமொழியில் உபயோகிக்கப்பட்டுள்ள சொல் (தமிழில் "பெரிய சுடர்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது) "ஒளி" என்னும் அர்த்தமுடையதாய் இராமல், "ஒளிதாங்கி" அதாவது "ஒளியைத் தாங்கிக் கொண்டிருக்கும் சுடர்" என்னும் அர்த்தமுடையதாய் உள்ளது.[7] ஒளி என்னும் அர்த்தத்தில் "ஓர்" (*or*) என்றல்ல, ஒளியைத் தாங்கிக்கொண்டிருப்பது என்னும் அர்த்தத்தில் "மாஓர்" (*maor*) என்னும் எபிரெயச் சொல் உள்ளது. இதைத் தற்கால விஞ்ஞானிகளும் உறுதிப்படுத்தியுள்ளனர். ஏனெனில், சூரியனைச் சுற்றியிருக்கும் வளிமண்டத்திலிருந்தே ஒளி வருவதாக விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.[8]

உண்மையில், சூரியன் இல்லாத நிலையிலும் வெளிச்சம் இருக்கக் கூடியது.[9] ஏனெனில், மின்னலின் ஒளி சூரியனிலிருந்து வருவதல்ல.[10] இதைப்போலவே, கற்களை உராய்வதன் மூலம் வரும் வெளிச்சமும் சூரியனிலிருந்து வருவதல்ல. உண்மையில், சக்திமிகு இலத்திரன்களினால் உருவாகும் "ஈத்திரன்" என்னும் அலைகளிலேயே ஒளி இருப்பதை விஞ்ஞானிகள் கண்டுபிடித் துள்ளனர். எனவே, தேவன் முதல் நாளிலேயே இவ்விதமாக வெளிச்சத்தை உருவாக்கியுள்ளார். ஆனால், நான்காம் நாளில் இவ்வெளிச்சம் சூரியனிலிருந்து வரும்படி செய்துள்ளார். எனவே, ஆதியாகமத்தின் முதல் நாள் சிருஷ்டிப்புக்கும் நான்காம் நாள் சிருஷ்டிப்புக்கும் இடையில் எவ்வித முரண்பாடும் இல்லை.

சூரியன் இல்லாத நிலையில் வெளிச்சம் இருக்கமுடியாது என்று எண்ணுவது அர்த்தமற்றது. ஏனெனில், இத்தகைய நிலை பரலோகத்தில் இருக்கும் என்பதை வெளிப்படுத்தல் 21:23 22:5 அறியத்தருகின்றது. இவ்வசனங்களில், "நகரத்திற்கு வெளிச்சம் கொடுக்கச் சூரியனும் சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை. தேவனுடைய மகிமையே அதைப் பிரகாசிப்பித்தது,

---

[5] V.P.Hamilton, *Genesis: The New International Commentary on the Old Testament*, p. 119; J.E.Hartley, *Genesis: New International Biblical Commentary*, p. 44.
[6] J.Calvin, *Genesis: Geneva Series of Commentaries*, p. 83; U.Cassuto, *A Commentary on the book of Genesis*, p. 44; G.Von Rad, *Genesis: The Old Testament Library Commentary*, p. 56; A.Louth, ed., *Ancient Christian Commentary on Scripture – Old Testament Vol.1*, p. 17.
[7] L.Berkhof, *Systematic Theology*, p. 155; W.MacDonald, *Believer's Bible Commentary*, p. 33; C.J.Collins, *Genesis 1-4: A Linguistic, Literary, and Theological Commentary*, pp. 58,82; T.H.Epp, *The God of Creation: Genesis 1-3*, p. 113.
[8] C.F.Keil & F.Delitzsch, *Commentary on the Old Testament Volume 1*, p. 30.
[9] D.E.Gowan, *Genesis: International Theological Commentary*, p. 21.
[10] J.Appleby, *Genesis: Chapters 1-11*, p. 4.

ஆட்டுக்குட்டியானவரே அதற்கு விளக்கு” என்றும், “அங்கே இராக்காலமிராது. விளக்கும் சூரியனுடைய வெளிச்சமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை. தேவனாகிய கர்த்தரே அவர்கள்மேல் பிரகாசிப்பார். அவர்கள் சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்” என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

தேவனே ஒளியாயிருப்பதினால், சூரியன் இல்லாத நிலையிலும் அவரால் வெளிச்சத்தைக் கொடுக்க முடியும்.[11] ஏனெனில், அவரே வெளிச்சத்தின் ஆரம்பமாக இருக்கின்றார். இதனால்தான் அவர் “ஒளியை வஸ்திரமாகத் தரித்துக் கொண்டிருப்பதாக” சங்கீதக்காரன் குறிப்பிட்டுள்ளான் (சங்.104:2).[12] இஸ்ரவேல் மக்களுடைய வனாந்திரப் பிரயாணத்தில் அக்கினி ஸ்தம்பத்திலும், ஆசரிப்புக் கூடாரத்திலும் தேவனுடைய பிரசன்னமே மக்களுக்கு ஒளியாக இருந்தது (யாத்.24:15-18). இதனால்தான், எதிர்காலத்தில் சூரியனிலும் சந்திரனிலுமிருந்து அல்ல, தேவனிலிருந்தே வெளிச்சம் கிடைக்கும் என்று தீர்க்கதரிசிகள் முன்னறிவித்துள்ளனர் (ஏசா.60:19-20, யோவே.2:30-31, சக.14:7).[13] எனவே, சூரியன் இல்லாத நிலையிலேயே முதல் நாளில் தேவன் ஒளியை சிருஷ்டித்துள்ளார்.[14] ஏனெனில், “ஒளியாக இருக்கும் தேவன் (1யோவா.1:5), சூரியன் இல்லாமலேயே உலகுக்கு வெளிச்சத்தைக் கொடுக்கக் கூடியவராக இருக்கின்றார்.”[15]

[11] H.Morris, *The Remarkable Birth of Planet Earth*, p. 69; U.Cassuto, *A Commentary on the book of Genesis*, p. 42.
[12] K.A.Mathews, *Genesis 1-11: The New American Commentary*, p. 145.
[13] H.G.May, “The Creation of Light in Genesis 1:3-5” *Journal of Biblical Literature*. 58 (1939), pp. 203-211.
[14] A.Louth, ed., *Ancient Christian Commentary on Scripture – Old Testament Volume 1*, p. 7.
[15] V.P.Hamilton, *Genesis 1-17: The New International Commentary on the Old Testament*, p. 121; J.Calvin, *Genesis: The Geneva Series of Commentaries*, p. 76.